நிலத்தும்' எனவே இதுவும் அடங்காதோவெனின், அடங்காது ; பாத் தோன்றும் அந்நிலங்கள் பகுத்துக்கொள்ளப் பொதுவகையால் ஆண் டோதினுனென்பது. மற்று ஐவகையடியும் ஓராசிரியத்துக்கண் வரல் வேண்டுமோவெனின், அன்னதோர் வரையறையுண்டே ? வரை யாது கூறினமையின் அவையெல்லாவற்ருனும் வருக. வருங்கால் ஐந்தும் ஆசிரியத்துக்கு உரியவென்பதே கருத்து. ஒழிந்த பாவிற்கு நிலங்கூருரோவெனின் ஆசிரியம் பதினேழ்நிலனுமுடைமையின் அக் கூறிய பதினேழ்நிலனுந் தளைவிரவுதலின் தளை அதற்குப்பின் கூறித் தளையதிகாரம்பட்டமையின் அவற்றுப்பின் ஒழிந்த பாவிற்கு நிலனுங் கூறுமென்பது.

மற்று ஆசிரியமென்பது மகரவீருதலின், 'மஃகான் புள்ளிமுன் னத்தே சாரியை' (தொல்-எழுத்-உரு-13.) என்பதனுன் அத்துச்சா ரியை பெறல்வேண்டுமெனின் அது செய்யுள்விகார மென்பாருமுளர். அற்றன்று, ஆண்டுநின்றது நான்காமுருபாயினன்றே அது கடாவாவது. அதனை ஏழாவதன் பொருண்மைக்கண் அக்குச்சாரியை ஈறுதிரியாது வந்ததென்று கொள்ளப்படும். (இஉ)

## 36?. விராஅய் வரினு மொரூஉநிலை யிலவே.

இஃது, எய்தியதிகந்து படாமைக் காக்கின்றது ; மெய்வகையமைந்த பதினேழ் நிலமெனவும், எழுபதுவகையின் வழுவெனவும் மேனி றுத்தமுறையானே ஆசிரியத்திற்குப் பதினேழ்நிலமாமாறு கூறினுன். இனி எழுபதுவகையின் வழுவாயின அப்பதினேழ்நிலத்து யாண்டு மாகாதென்பது பட்டதனை இகந்துபடாமைக் கூறினமையின்.

இதன்பொருள்: தளைவிரவிவரினும் ஒருவப்படா, என்றவாறு.

மற்று, இதனைத் தளை விரவிவரினுங் கட்டளையடியாமெனப் புற னடுத்தானென்று கோடுமோ, தளைவிரவிற் கட்டளையடியாகாதென்று கோடுமோவெனின், தளைமயங்காதனவே தளைவகையடியெனவும் அல் லன கட்டளையடி யாகாவெனவுங் கோடுமென்பது. அஃதேல் தளை மயங்கின அடிக்கும் பதினேழ் நிலனுங் கோடுமோவெனின், கோடு

மன்றே? விராய்வரினுமென்ற உம்மை இறந்தது தழீஇயிற்றாகலி னென்பது. (௬௧)

## 366. தன்சீர் வகையினுந் தளைநிலை வகையினு மின்சீர் வகையி னைந்தடிக்கு முரிய.

இஃது, எய்தாத தெய்துவித்தது; என்னை? இடற்சீராற் கட்டளை யடியாமாறெல்லாம் 'ஐவகை யடியு மாசிரியக்குரிய' (தொல்-செய்-52) என்னுந் துணையுங் கூறிப் பின்னும் 'விராய்வரினும் ஒரூஉ நிலையில' (தொல்-செய்-53) எனக் கட்டளையடியன்றியும் அளவடி வருமென வும் அவை பதினேழ் நிலத்தவெனவுங் கூறி, இனி உரிச்சீரானுஞ் சீர் வரையறையடி உளவென்பதூஉம் அவ்வுரிச்சீரால் தளைவகையடி உள வென்பதூஉம் அவை பதினேழ்நிலத்தின் இகந்துவாராவென்பதூஉங் கூறுகின்றமையின்.

இதன்பொருள் : தன்சீர்வகையினும் — ஆசிரியவுரிச்சீரானும் ; அதனை அதிகாரத்தாற் கொள்ளப்படும்: தளைநிலைவகையினும்— அவ் வாசிரியவுரிச்சீரானாகிய தளைநிலைமைப்பகுதியானும் ; இன்சீர்வகையி னும்—* இன் சீர்ப்பகுதியானும் ; ஐந்தடிக்குமுரிய—அவையும் மேற் கூறிய ஐவகையடிக்கும் உரியவாம், என்றவாறு.

ஐவகையடிக்கு முரியவெனவே பதினேழ்நிலத்தின் இகந்துவாரா வென்பதாம். தன்சீரென்றது வகையென்றது அவற்றை இருபகுதி யானே 'முன்னிரை யுறினு மன்ன வாகும்' (தொல்-செய்-34) என்ற தும் வெண்பாவுரிச்சீர் ஆசிரியவுரிச்சீரென்புழி உடன்கூறாது கூறிய வேறுபாடும் நோக்கியென்பது. அதனது பயம் வருகின்ற தளைவகைக் காயின் ஆசிரியவுரிச்சீராறுந் தளைகொள்ளப்படா, முன்னிரையீற்ற இரண்டுமல்லதென்றவாறு. தளைநிலைவகை சிறப்புடைமையின் அது முற்கூறுகவெனின், அங்ஙனமாயினும் அறுவகைச்சீரானுஞ் சீர்வகை யடிவருதல் பெரும்பான்மையாகலானும், அவற்றுள்ளும் நீடுகொடி குளிறுபுலி என்னும் இரண்டுமே பற்றித் தளையேகோடல் சிறுபான்மை

* 'இதன்சீர்' என்பது முன் அச்சுப்பிரதியின் பாடம்.

நோக்கியுந் தன்சீர்வகை முற்கூறப்பட்டது. அல்லதூஉந், தளைநிலை வகை முற்கூறின் அவ்வியற்சீர்த்தளைமேற் செல்லும்; அவ்வாறன்றித் தன்சீர்த்தளையே கோடற்கும் அது பிற்கூறினானென்பது. மற்றுத் தன்சீராவதனை இன்சீர்வகையோடு ஐந்தடிக்கு முரித்தென்றதென் னையெனின், ஆசிரியவுரிச்சீர் நான்கும் விரவிவின்றாழி அகவலோசை பிறவாதென்பது அறிவித்தற்கென்பது. எனவே, ஒன்றிடையிட்டும் இரண்டிடையிட்டும் இன்சீர் வரல்வேண்டுவதாம்.

இனிச் சீர்வகையினென இயற்சீர்களான் உரிச்சீர்களைவகுத்து விரீஇக்கொள்ளப்படும்.

உதாரணம்:

"ஓங்குகோட்டுத் தொடுத்த பாம்புபுரை யருவி"

எனவும்,

"விவந்துதோன்று களிற்றி னிலங்குகோடு புரைய"

எனவும் இவை இயற்சீரொன்று இடையிட்ட ஆசிரியவுரிச்சீரான் வந்த நேரடி.

"பாம்புமணி யுமிழும் பானா ளிங்குவரல்"

என்பது இயற்சீரிரண்டு இடையிட்டுவந்தது. இதுவும் 'அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி' (தொல் - செய் - 11) என்பதனான் அகவ லோசை வழுவினவா றறிந்துகொள்க.

இனித் தன்சீரால் தளைநிலையடி வருமாறு:

"ஓங்குமலைப் பெருவிற் *பாம்புநாண் கொளீஇ" (புறம்-55.)

எனவும்,

"உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை" (புறம்-3.)

எனவும் வரும்.

* 'பாம்புஞாண் கொளீஇ' என்பதும் பாடம்.

தளைவகையென்றது நிலையென்றதனான், அவற்று இரண்டாசிரிய வுரிச்சீரும் அடிமுதற்கணின்று சீராவதன்றி இடைவாராவென்பது கொள்க. தளைநிலையென்றது வகையென்றதென்னையெனின், உரிச் சீரால் தளைவழங்கின் ஓரடிக்கண் இரண்டுவரின் ஓசையுண்டாமென்ப துணர்வித்தற்கென்பது. இவையும் இன்சீர்வகையொடு வருமெனவே தன்சீர் இயற்சீரொடு தட்குமென்பதாம். அஃதேல், 'தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா' (தொல்-செய்-55) என வருகின்ற சூத்திரத் தானே தன்சீர் பெறுதுமாகலின் ஈண்டுத் தளைநிலைவகையே கூறுக வெனின், இஃது ஆசிரியத்திற்குக் கூறினான் ; அது வெண்பாவிற்குக் கூறினான். அல்லாக்கால் அது மிகையாமென்பது. எனவே, தன்சீர் வகை நாலெழுத்திற் குரித்தன்றென்பதூஉம், தளைவகையடிக் குறளடி முதன் மூன்று நிலத்திற்கும் உரித்தென்பதூஉம் உரையிற்கொள்க.

"ஒங்கு கோட்டுமீது பாய்ந்து பாய்ந்து
முசுக்கலை யாடு நாடற்
குரைப்பதை யெவன்கொனந் தோளே தோழீஇ"

என்பது ஐந்தெழுத்தால் தன்சீரடிவந்தது.

"ஆடுகொடி நுடங்கு காடு போந்து
விளங்கிழை *கோயிற் சேர்ந்தன
முழங்குக வானந் தழங்குகுரல் சிறந்தே."

என்பது எழெழுத்தால் தளைநிலையடி வந்தது. பிறவும் அன்ன.

இன்சீரென்றது வகையென்றதனால் † இயற்சீர்ப்பாற்படுத்து இயற் றிக்கொள்ளப்பட்ட அசைச்சீரும் இன்சீரேயாம்; தன்சீர்வகையினுந் தளைநிலைவகையினும் இடையிட்டு வந்ததென்பது. இவை மேற்காட் டியவற்றுட் காணப்படும். (௬௪)

* 'நகர்வயிற் போந்தனம்' என்பதும் பாடம்.

† 'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே-தளைவகை சிதை யாத் தன்மை யான' (தொல்-செய்-28.)

## 367. தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா.

*இது, மேல் ஆசிரியத்திற்குத் தன்சீர்வகையுந் தன்றளைவகையுங் கூறியவழியானே வெண்பாவிற்குச் சீர்வகையுந் தளைவகையுங் கூறுகின்றது.

---

* "இத்துணையும், அடியும், அடிக்குரிய எழுத்தும் ஓதினார் இவ்வடிக்கண் ஓசைவேறுபாடுணர்த்துந் தளைஇலக்கணம் உணர்த்துவார், அத்தளைக்கண் வருவதோர் மரபுணர்த்திற்று. தத்தஞ்சீர்நிலைவகையானுந் தளைநிலைவகையானும் இனியவோசை வேறுபாட்டினையுடைய ஐந்தடிக்குமுரிய தன்சீருள்வழித் தளைகள்வேறுபாடு கோடல் வேண்டா, என்றவாறு. எனவே, சீர்தான் ஓசையைத் தருமென்றவாறும். உரிய தன்சீரென்று ஐந்தடியானும் ஏற்றவழி நிலைபெறுந் தன்சீரென்று கொள்க; அஃதாவது, குறளடியாக ஐந்தெழுத்தினும் ஆறெழுத்தினும் ஓரசைச்சீரும் வருதலன்றி மூவசைச்சீரான் வாராமை, பிறவாசிரியர்கொண்ட நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, இயற்சீர்வெண்டளை, கலித்தளை, ஒன்றியவஞ்சித்தளை, ஒன்றாதவஞ்சித்தளை என எழுவகையினும், வஞ்சித்தளை நிலைமொழி வஞ்சியுரிச்சீராய் வருஞ்சீர் முதலசையோடு ஒன்றியது ஒன்றிய வஞ்சித்தளையெனவும், ஒன்றாதது ஒன்றாத வஞ்சித்தளையெனவும் வழங்குபவாகலின், அவ்விருபாற்றானும் தளையாற் பயனின்றென, நிலைமொழியாகிய வஞ்சியுரிச்சீர் தானே ஓசையுணர்த்துதலின் வஞ்சித்தளைகோடல் வேண்டாராயினார். இனி வெண்சீர்வெண்டளையும் வெண்சீர்நிற்ப வருஞ்சீர்வெள்ளையும் வெண்சீராதல் இயற்சீராதல் வந்து வெண்டளையாக வேண்டுதலின் நிலைமொழியாகிய வெண்சீரை 'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே' (தொல்-செய்-9) என ஓதுதலின் இதனை நிரையீற்றியற்சீராக்கினால் வருஞ்சீர் நேரசைமுதலியற்சீரானதும் இயற்சீர் வெண்டளையாம். அவ்வாறன்றி வருமொழியும் வெண்சீராயின் 'தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா' என்பதனாலடங்கும். அதனானே யிருபாற்றானும் வெண்சீர்வெண்டளை கொள்ளாராயினார் இனி, ஒழிந்த நான்குதளையுங் கூறவேண்டாம், இயற்சீரான்வருதலின் எனின், அதன்கண்ணே இயற்சீர்வெண்டளை கூறவேண்டுதலின் ஆசிரியத்தளையுங் கூறவேண்டுமெனக." என்பது இளம்பூரணர் உரை.

இதன் பொருள்: தன்சீர்—வெண்சீர்; உள்வழி—வெண்சீரே வருஞ்சீராகியும் வந்தவழி; என்னை? தளைவகைக்கு இரண்டுசீர் வேண்டுதலானுந் தளைவகைவேண்டாதனிலம் இதுவென்கின்றாகலானுமென்பது: தளைவகைவேண்டா—தளைவகை நிலைமைகொள்ளப்படா மற்று அவ்வடிக்கண், என்றவாறு.

எனவே, வெண்சீர்நிற்ப இயற்சீர்வந்தொன்றின் வெண்டளையாமென்பதே கருத்தாயிற்று. இஃது உய்த்துக்கொண்டுணர்தலென்னும் உத்திவகை.* இதனானே வெண்சீர்க்கு வெண்சீர்வந்தொன்றுவது கட்டளையடியெனப்படாது சீர்வகையடியா மென்பது பெற்றாம்.

"வெண்சீ ரொன்றின் வெண்டளை கொளாஅல்"

"வெண்சீ ரொன்றினும் வெண்டளை யாகு
மின்சீர் விரவிய காலை யான"

என்றார் காக்கைபாடினியாரும்.

வெண்சீ ரொன்றியது வெண்டளை யாகாதென்றற்குக் காரணமென்னையெனின்,

'அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய
தளைவகை யொன்றாத் தன்மை யான' (தொல்-செய்-58.)

என்புழி, அளவுஞ் சிந்தும் அல்லாத †வேறிய நிலமெல்லாம் வெண்பாவுங் கலிப்பாவுந் தம்மில் தளைவகையொக்குமென்றானாகலினென்பது. எனவே, வெண்சீர் நான்கும் ஒன்றிவரின் அது கலிப்பாவிற்குஞ்

மற்றும் வஞ்சியுரிச்சீருந் தன்சீராகலின் இன்னவாறு தளைகொள்ளு மென்றானேனெனின், அவை தன் சீருள்வழி ஒன்றினும் ஒன்றாவாயினும், பிறசீர் வந்துழி ஒன்றினும் ஒன்றாவாயினும் வஞ்சித்தளையாகி வரையறையின்மையானும் வஞ்சியடி அறுநூற்றிருபத்தைந்

* 'இது துதலியதறிதற்பாற்படும்' என்பர் நச்சினார்க்கினியர்.
† 'வெறிய' என்பது முன் அச்சுப்பிரதிப் பாடம்.

தடியுட் படாமையானும் அவை கூறுணயினன் ஆசிரியனென் பது. (௬௭)

**368. சீரியை மருங்கி னோரசை யொப்பி னாசிரியத் தளையென் றறியல் வேண்டும்.**

—ளையடிக்கண் இயற்சீர் தட்குமாறுணர்த்துதல் நுத

இதன்பொருள்: இயற்சீர்பத்தும் பிறிதொன்றனோடு இயையுங் கால் அவை தத்தம் ஈற்றசை ஒன்றி, வருஞ்சீரின் முதலசையோ டொப்பு நிற்பின் ஆசிரியவடிக்குந் தட்கும் முறைமையென் றறியப் படும், என்றவாறு.

'ஒப்பின் ஆசிரியத்தளை' யெனவே ஒவ்வாதொழியின் வெண்டளை யென்று எதிர்மறுத்துக்கொள்ளப்படும். என்னை ?

'எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே'
(தொல்-சொல்-கிளவி-61.)

என்றமையின்.

" அகலிரு விசும்பிற் பாயிருள் பருகி" (பத்து-பெரும்பாண்-1.) என்றவழி நேரும் *நிரையும் சீரியை மருங்கின் ஓரசை ஒன்றி ஆசிரி யத்தளையாயின.

"மல்லர்க் கடந்தானிறம்போ லிருண்டெழுந்து" (ஐந்திணை,50-1.) என்புழி முதலடி இயற்சீர் ஒன்றாது வெண்டளையாயிற்று.

மற்றுச் சீரியைமருங்கின் ஓரசையே வரினென்னாது 'ஒப்பின்' என்ற தென்னையெனின், உரியசை முதலும் ஈறுமாகியவழி அவை இயலசை யோடு ஒப்புமைநோக்கித் தளைகொள்ளினல்லது தம்மோடுதாம் ஒன்று தல் கொள்ளாரென்றற்கென்பது இதனானும் பெற்றாம். போதுபூ என்பது வருஞ்சீராயவழிப் போரேறு என்பது ஓரசையொன்றிற்

* 'நிரையுமொன்றி' என்பது முன் அச்சுப்பிரதியின் பாடம்.

றென்று ஆசிரியத்தளையென்னுமையென்பது. இனி அவை நின்ற* சீராயவழி நிரையீறாகல் அறியல்வேண்டுமென்னும் மிகையாலுங் கொள்க. இனி ஈரசையொப்பினென்பது பாடமாக உரைப்பின் நேரும் நிரையும் ஒன்றினென்றவாறுமாமெனக்கொள்க. (௬௪)

369. குறளடி முதலா வளவடி காறு
முறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப.

இது, வஞ்சியடியுறழுமாறும் அதுபெறும் நிலனும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள் : நாலெழுத்துமுதலாகப் பதினொன்கெழுத்தளவும் உறழும் நிலைமையில வஞ்சியடிக்கு, என்றவாறு.

இனி, முதலும் ஈறும் யாதெனப்படுமோவெனின் 'தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே' (தொல்-செய்-46) என்றதனன் ஆறெழுத்தடி முதலாகவும், 'நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்' (தொல்-செய்-42) என்றதனற் பன்னிரண்டெழுத்தடி யீறாகவும் உறழுமென்றவாறு. எனவே, வஞ்சியடிக்கு நிலன் ஏழென்பது சொல்லியவாறு. அதுவே கருத்தெனின், இச்சூத்திரம் மிகையாம் பிறவெனின், அற்றன்று. வஞ்சியுரிச்சீர் மூன்றெழுத்திற் சுருங்கா, ஆறெழுத்தின் ஏறாவெனவே நேர்நிலைவஞ்சிக்கு மூவெழுத்துச்சீர் இரண்டுவந்த இருசீரடிக்கு ஆறெழுத்துமுதலாமென்பதூஉம் ஆறெழுத்துச்சீர் இரண்டுவரிற் பன்னிரண்டெழுத்தடி ஈறாமென்பதூஉம் பெறுதுமால் அவ்வச்சூத்திரங்களானேயெனின், ஆண்டு வஞ்சியுரிச்சீர்க்கு எழுத்துவரையறைகூறினன்; அவ்வடி இத்துணைநிலம் பெறுமெனற்கு இது கூறல்வேண்டுமென்பது. அல்லதூஉம், அங்ஙனங் கொள்ளின் உய்த்துணர்ச்சியாம். இஃது எடுத்தோத்தாகலின் எடுத்தோத்துக் கிளந்து உய்த்துணராரென்பது. இனி இது கூறுக்காற் கட்டளையடிக்கண் இயற்சீர்வாராதென்பது பெறலாகாதாம். ஆகவே, ஞாயிறு புலிசெல்சுரம் என்பது கட்டளையடியாகியசெல்லும். வஞ்சித்தூக்கின் அதுகொள்ளாமையின்

* 'நின்று' என்பது முன் அச்சுப்பிரதியின் பாடம்.

அது விலக்கவேண்டி இது கூறினான்: என்னை ? இயற்சீர்கொள்ளின் ஓரெழுத்தாகிய இயற்சீரும் ஆண்டேகோடல்வேண்டும் ; அது கொள்ளின் இச்சூத்திரத்திற்கு ஏலாமையினென்பது.

இனி, வஞ்சியுரிச்சீர் அறுபதும் இருநிலைமைப்படுவன இருபத்து நான்கும், நான்குநிலைமைப்படுவன இருபத்தெட்டும், எட்டுநிலைமைப்படு எட்டுச்சீருமாகி இருநூற்றிருபத்துநான்காய் விரியும்.

“இரண்டுநான் கெட்டு நிலைமைய வாகித்
திரண்ட நிலைவஞ்சிச் சீர்க - ளொருங்கே
யிருபத்து நான்கிருபத் தெட்டெட் டெனட்டா
யிருநூற் றிருபத்து நான்கு”*

அவ்வஞ்சியுரிச்சீர் இருநூற்றிருபத்துநான்கினுள்ளும் ஒன்ப தெழுத்துச்சீரொன்றும், எட்டெழுத்துச்சீரொன்பதும், ஏழெழுத்துச் சீர் முப்பத்துமூன்றுமாக நாற்பத்து மூன்றுவகையான் உறழும் நிலம் இல இச்சூத்திரத்தான் ஓதியவாற்றானென்பது.

“நாலாதி யீற்றன நான்கு பதினாற
றாதிய வெண்சீ ரகப்பட்ட மூவைந்து
பொய்ப்பினவ் வஞ்சி யடியுற ழாமோனை
மூவைந்து மூன்றுமூன் றொன்று”

“இரண்டெட்டு மூவெட்டு நாலேழா றைந்தொ
றகன்றநாற் பஃதுநான் காறேழைம் பத்திரண்டு
நான்கைந்தெட் டொன்பா னறுபஃ தொன்றுநான்
காறேழு பெற்றனமூ வைந்து”

* “அறுபஃ தாக வகுத்த வஞ்சியுண்
மூவெண் சீர்க ளிருநிலைமை யெய்தி
நாலேழ் சீராக நான்கு நிலையெய்தி
யிருநான் கிருசீ ரிருநான்கு நிலையெய்தி
யிருநூற் றிருபத்து நான்காய் விரியும்”
என்பது நச்சினார்க்கினியர் காட்டிய சூத்திரம்.

"நாலெட் டேயெழுட் டறுபத் திரண்டிவற்று
ளேழெழுத்தா றெட்டெழு பத்துமூன் றேழா
மேழெழு மும்மூன்று மெட்டெழுத்தா ளொரொன்று
மாறெட் டறுபஃது மூன்று"

"எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை யெய்தல்
வரைக்கு வரையறை யின்மை யான"

"வஞ்சி யுரிச்சீர் கிளையுரி யுறழ்ந்து
மெல்லாங் குறைத்து மிகுத்துக் *கொளாஅல்"

எனவே, இவ்வாற்றான் வஞ்சியுரிச்சீர் ஏழெழுத்தும் எட்டெழுத்தும் ஒன்பதெழுத்துமாகிவரும். அவையறிந்து மாற்றுக. அவை யாவன :

களிறுபோகுவாய், களிறுவழங்குவாய், புலிவழங்குசுரம், மாவழங்கு சுரம், களிறுவருசுரம், களிறுபோகுசுரம், புலிவழங்குகாடு, பாம்பு வழங்குகாடு, களிறுவருகாடு, களிறுபோகுகாடு, மாவழங்குகடறு, புலி போகுகடறு, பாம்புவருகடறு, பாம்புபோகுகடறு, களிறுசெல்கடறு என இவை பதினைந்தும் ஏழெழுத்தாங்கால் உறழ்நிலை இலையெனப் படும். களிறுவழங்குவாயென்பதனை அரவுவிரவுவாயென ஏழெழுத் துச்சீராம். ஒழிந்தனவும் அவ்வாறே கொள்க. இவை பதினைந்தும் ஏழெழுத்தின் இகவாதன. இனி ஏழெழுத்துச்சீரின் இவ்விரண்டும் எட்டெழுத்துச்சீர் ஒரோவொன்றுமாகி வருவன மூன்று சீர் உள. அவை களிறுவழங்குசுரம், புலிவழங்குகடறு, களிறுவருகடறு என்பன. இவற்றைக் களிறுவிரவுசுரம், அரவுவழங்குசுரம், அரவுவிரவுசுரம் என்றாற்போல வாய்பாடு படுத்தொட்டிக்காணவே ஏழெழுத்துச்சீரா றும் எட்டெழுத்துச்சீர் மூன்றுமென ஒன்பதாம். களிறுவழங்குகாடு, பாம்புவழங்குகடறு, களிறுபோகுகடறு என இவை மூன்றுசீரும் ஒரோ வொன்று ஏழெழுத்துச்சீர்மூன்றும் எட்டெழுத்துச்சீரொன்றுமாக மும்நான்கு பன்னிரண்டும் உறழ்நிலைமையில எனப்படும். அவை

* 'கொளல்' என்பதும் பாடம்.

களிறுவிரவுகாவு, களிறுவழங்குகுரவு, அரவுவிரவுகாடு, அரவுவிரவுகுரவு என ஏழெழுத்துச்சீர்மூன்றும் எட்டெழுத்துச்சீ ரொன்று மாயினவாறு கண்டுகொள்க. ஒழிந்தனவும் அவ்வாறே கொள்க. இனிக் களிறு வழங்குகடறு என்பது ஆறெழுத்துச்சீர் ஒன்றும், ஏழெழுத்துச்சீர் மூன்றும், எட்டெழுத்துச்சீர் மூன்றும், ஒன்பதெழுத்துச்சீரொன்று மென அதுவும் எட்டுநிலைமைத்தாம். அவற்றுள், ஆறெழுத்துச் சீரொன்றும் ஒழித்து, ஒழிந்த வஞ்சியுரிச்சீரேழும் உறழ்நிலையில வஞ்சிக்கெனப்பட்டன. அவை, களிறுவழங்குகுரவு, களிறுவிரவுகடறு, அரவுவழங்குகடறு என மூன்றும் ஏழெழுத்துச்சீர்; களிறுவிரவுகுரவு, அரவுவழங்குகுரவு, அரவுவிரவுகடறு என மூன்றும் எட்டெழுத்துச்சீர்; அரவுவிரவுகுரவு என்பது ஒன்பதெழுத்துச்சீர்: இவையெல்லாந் தொகுப்ப ஏழெழுத்துச்சீர் முப்பத்துமூன்றும் எட்டெழுத்துச்சீரொன் பதும் ஒன்பதெழுத்துச்சீரொன்றும் ஒழித்து, ஒழிந்த வஞ்சியுரிச்சீர் நூற்றெண்பத்தொன்றும் உறழ்நிலையுடையவெனக்கொள்க.*

ஏழெழுத்துச்சீரும் எட்டெழுத்துச்சீரும் ஒன்பதெழுத்துச்சீரும் அடியுறழ்வனவாக்கி மேன்மூன்றுசீரானும் மூன்றுநிலனேற்றிப் பதி னெட்டெழுத்தடியளவும் உறழும் வஞ்சியடி என்பாருமுளர். அங் ஙனம் ஒன்பதெழுத்துச்சீர் இரண்டு வந்த குறளடி பதினெட்டெனப் படுதலின், வஞ்சிநிலம் பதின்மூன்றாதல் வேண்டும் ஓசை நோக் காது சீர்நோக்கி உறழ்ச்சிகொள்ளினென மறுக்க.

அவை அளவடியோடு ஒத்த சிறப்பினவன்மையானும், அவற் றுக்குத் தளைவகையின்மையானும் எடுத்தோதித் தொகைகூறிற் றிலனாயினும், நாம் அவற்றை எண்ணி உணர்ந்து கூறுங்கால் ஒரு

---

“அவற்று ளொன்பதெழுத் தாஞ்சீ ரொன்று
மிருநான் கெழுத்தா குஞ்சீ ரொன்பது
மேழெழுத் தெய்துவ முப்பத்து மூன்று
மாகநாற் பத்து மூன்று மாக
நூற்றெண் பத்தொன் றடியுற ழும்மே”
என்பது நச்சினார்க்கினியர் உரைச் சூத்திரம்.

சீர்க்கு அடிநான்காக வஞ்சியடி எழுத்திருபத்து நான்காமெனக் கொள்க. அவையுறழுங்கால் மூன்றெழுத்துச்சீர் ஆறாதி ஒன்பது உயர்வும், நாலெழுத்துச்சீர் எழாதி பத்தெழுத்துயர்வும், ஐயெழுத்துச்சீர் எட்டாதி பதினொன்றுயர்வும், ஆறெழுத்துச்சீர் ஒன்பதுமுதல் பன்னிரண்டுயர்வும் பெற்று நின்ற சீரோடு மூன்றெழுத்துசசீரும் நாலெழுத்துச்சீரும் ஐயெழுத்துசசீரும் ஆறெழுத்துச்சீருந் தந்துறழ்க வென்பது. அவை:

“ கால்காய்ந்தது காம்புநீடி”

என்பது ஆறெழுத்தடி.

“ நல்கூர்ந்தது வில்லோர்சுரம்”

என்பது எழெழுத்தடி.

“ வான்பெய்தது *மண்குளிர்ப்புற”

என்பது எட்டெழுத்தடி.

“ தேன்பெய்தது செழுந்தரைதொறும்”

என்பது ஒன்பதெழுத்தடி.

இவை பூவேழுத்து மாசெல்காடு நின்றுறழ்ந்த நான்கடியும் வந்த வாறு. ஒழிந்தனவும் அன்ன.

“ மண்மாய்ந்தென வுள்வீழ்ந்தது”

என்பது எழெழுத்தடி.

“ விண்பாயந்தென மேற்சென்றுடுத்தது”

என்பது எட்டெழுத்தடி.

“ காடோங்கிய கல்கெழுசுரம்”

என்பது ஒன்பதெழுத்தடி.

---

* ‘மணைக்குளிர்ப்புற’ என்பது முன் அச்சுப்பிரதியில் பாடம். இப்பாடங் கொள்ளின் ஓரெழுத்து மிகுதல் காண்க.

" கோடோங்கிய குறும்பொறைமருங்கு"

என்பது பத்தெழுத்தடி.

இவை நான்கடியும் நாலெழுத்து மாசெல்சுரம் வின்றுறழ்ந்த அடி.

" மழைபெய்தென வான்வெள்ளென்று"

என்பது எட்டெழுத்தடி.

" தழைபச்செனுந் தண்ணென்காவு"

என்பது ஒன்பதெழுத்தடி.

" கமழ்பூந் துணர் கள்ளவிழ்தொறும்"

இது பத்தெழுத்தடி.

" இமிழ்தூங்கிசை யிசைசுரும்புகள்"

என்பது பதினோரெழுத்தடி.

இவை நான்கும் ஐயெழுத்துப் புலிசெல்சுரம் வின்றுறழ்ந்த அடி.

இனி, *ஒன்பதெழுத்துமுதற் பன்னிரண்டளவும் உயர மற்றையனபோல நான்கடிபெறும்.

" அமைவிடுகொடி வஞ்சியோர்ந்து"

என்பது ஒன்பதெழுத்தடி.

" †கனைகுரலன கானக்கோழி"

என்பது பத்தெழுத்தடி.

" ‡தினைப்புனத்தித ழைமறப்பெயர்"

என்பது பதினோரெழுத்தடி.

" மனைக்குறமகள் கடைப்புறந்தரும்"

என்பது பன்னிரண்டெழுத்தடி.

---

* 'ஆறெழுத்துப் புலிவருசுரம்' என்பது ஈண்டிருத்தல் வேண்டும்

† 'கனை' என்பதும் பாடம்.

‡ " தினைப்புனத்தித ணையற்பிரியாது " என்பதும் பாடம்.

இவ்வாறே ஒழிந்தனவும் உறழ்ந்துகொள்க.

மூன்றுபாவின்றளைச் சிறப்பின்மையின் வஞ்சியடி ஈண்டுப்போ தந்து கூறினனென்பது. ஒழிந்த *முச்சீரடி சிறுவரவிற்றாகலின் அதற்குக் கூறியதிலனென்பது. (௯)

370. அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய
தளைவகை யொன்றாத் தன்மை யான.

இது, ஆசிரியவடிக்கும் அதன் நடைத்தாகிய வஞ்சியடிக்கும் உரிய நிலங்கூறி வெண்பாவிற்குரிய நிலங் கூறுகின்றது.

இதன்பொருள் : அளவடி ஐந்துஞ் சிந்தடி மூன்றுமென எட்டு நிலம்பெறுந் தளைவிரவாத்வாற்றான் வெண்பாவடி, என்றவாறு.

அளவடி முதற்கூறியதென்னையெனின், மேல் நிறுத்தமுறையாற் கொள்ளாது ஈண்டுச் சொல்லும் முறைமையாற் கூறினனென்பது.

"நின்று நினைந்து நெடிது பெயர்ந்து"

என்பது ஏழெழுத்தடி.

"அறிவறிந்தார்த் †தேறியக்கா லஞ்சுவ தில்லை."

என்பது பதினான்கெழுத்தடி.

இதனும்பர் நெடிலடியானும் வெண்பாவடி வருவன உள.‡

---

* 'மூன்றுசீரடி' என்பதும் பாடம்.

† 'தேற்றியக்கா லஞ்சுவ தில்லை' 'தேறுங்கா லஞ்சுவதொன் றில்லை' என்பனவும் பாடம்.

‡ 'இதனும்பர் நெடிலடியான் வந்தன சீர்வகையடியாம். "வான வரு நான்முகனும் வாசவனு மாமுனிவர் - ஆனவருங் காணா அரன்" எனப் பதினேழெழுத்தான் வந்த வெண்சீரொன்றிய சீர்வகை யடி. "வானவரு நான்முகனும் வாசவனுங் காணாரே" என்பது துள்ள லோசைக் குணர்க. இவ்வெண்பாவை ஏந்திசைச் செப்பலெனப் பின் னுள்ளோர் கூறுவர். அவர் கூறும் ஒழுகிசையும் தூங்கிசையும் பெரும் பான்மை பதினான்கெழுத்தின் இகந்து வாராவென்றுணர்க' என்பது நச்சினார்க்கினியர் உரை.

அவை கட்டளையடி யெனப்படா, செப்பிக்கூறும் பாவாகாது செய்கைதோன்றியே நிற்குமாகலினென்பது. பிறிது காரணம் உண்டாயினும் அறிந்துகொள்க. தளைவகை ஒன்றாமையென்பது வெண்பாவும் வெண்பாநடைத்தாகிய கலிப்பாவும் மயங்காமைகாரணந் தானென்றவாறு. கலியோசைமயங்கி வருவனவும் வெண்பாவடியுளுள. அவை நெடிலடி மூன்றானும் வருமெனக்கொள்க. ஒரோவடியே வெண்பாவடியுமாய்த், துள்ளிக் கலியடியுமாகித் தளைவகை ஒன்றுமாகலான் அம்மயக்கந் தீராதென 'அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய' என்றானென்பது. மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய் என்றக்கால், இதனை 'அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி' (தொல்-செய்-11) என்றதனாற் கலியோசை பிறப்பவுஞ் சொல்லிக் கண்டு கொள்க.

மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்
மாவருவாய் தேமா வரகு

என்றிதனையே ஓசையூட்ட வெண்பாவாயிற்று. இது 'மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாற்றினரே' எனக் கலியோசையாயினவாறறிக. (இஅ)

371. அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி
யிருநெடி லடியுங் கலியிற் குரிய.

இது முறையானே கலிக்குரிய நிலமுணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : ஐவகையடியினும் அளவடிமிகுதியாகிய பதின்மூன்றெழுத்தும் பதினன்கெழுத்தும் நெடிலடியுங் கழிநெடிலடியுங் கலியடிக்குரிய, என்றவாறு.

எனவே, அதுவுந் தன் முதற்கட் பாவாகிய வெண்பாப்போல எட்டுநிலம் பெறுவதாயிற்று. ஒழிந்த அடி மூன்றனுள்ளும் ஒவ்வாது மிக்கநிலம் இரண்டனையும் மிகுதியென்றானென்பது.

இனி 'ஒத்த நாலெழுத் தொற்றலங் கடையே' (தொல்-செய்-38) என்பதேகொண்டு பதினேரெழுத்துமுதல் நான்குநிலனும் அளவடி யிறுதியெனப்படும் எனவும், அவை கலிக்குரிய எனவுங் கொள்வாரு முளர். அங்ஙனங் கொள்வார்க்கு 'ஞாயிறு கடியாறு கடியாறு கடியாறு' என்றதனைப் பதினேரெழுத்தடியென்று காட்டல்வேண்டும். அஃது ஆசிரியவடியாம். ஆகலான் அற்றன்றென்பது. இனி, 'ஞாயிறு மாசேர் வாய் மாசேர்வாய் மாசேர்வாய்' என்பதோவெனின்; அது கலிப்பா வோடு தளைவகை ஒன்றிய வெண்பாவடியாகலானும், நிரைமுதல் வெண்சீர் வந்து நிரைதட்பினன்றி ஞாயிறு என நின்ற நிரையீற்றியற் சீர்ப்பின்னர் நேர்வந்தாற் கலித்தளையாகாது வெண்டளையாமாகலா னுங் கட்டளையடிக்கு அவ்வாறுகோடல் குற்றமென்பது. அல்லதூஉங் கலிப்பாவிற்குப் பத்துநிலங் கொள்ளிற் கட்டளையடி அறுநூற்றிருபத் தைந்தன்றிப் பல்குமென்பது.* (ருக)

## 372. நிரைமுதல் வெண்சீர் வந்துநிரை தட்பினும் வரைநிலை யின்றே யவ்வடிக் கென்ப.

இதுவுங் கலித்தளைவிகற்பங் கூறுகின்றது.

இதன்பொருள் : நிரையீற்றியற்சீரும் நிரையீற்றாசிரியவுரிச்சீரும் நிற்ப நிரைமுதல் வெண்சீர்வந்து நிரையொன்றியக்காலுங் கலித்தளை யாம், என்றவாறு.

"மணிபுரை திருமார்பின் மறுத்தயங்கத் தோன்றுங்கால்," என் புழித் திருமார்பினென நிரைமுதல்வெண்சீர்வந்து மணிபுரையென் னுஞ்சீர் இறுதி நிரையொடு தட்டுக் கலித்தளையாயிற்று. எனவே நிரைமுதலியற்சீர்வந்து நிரைதட்பினும் நேர்முதல்வெண்சீர் வந்து ஒன்றுதொழியினும் அது கட்டளைவகையாற் கலியடியாகாதென்ற

* 'இனிச் சீர்வகையடியாய் இந்நிலங்களைத் தப்பி வருவனவுங் கொள்க. உதாரணம்: "ஐயிரு தலையி னரக்கர் கோமான்" "சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தையர்" (பாலைக்கலி-3) எனப் பதினொன்றும் பன்னிரண்டும் எழுத்தான் வந்தன'. என்பது நச்சினார்க்கினியர் உரை.

வாறு. என்னை? துள்ளாத இயற்சீர்ப்பின் விரைமுதல்வெண்சீர் வந்து துள்ளுவிக்கல் வேண்டுமாதலானும் ஞாயிறு மாசேர்வாயென் பது வெண்பாவடியுமாம் ஆகலானுமென்பது. 'அடிக்கென்ப' என்றத னுன் இதுவுங் கட்டளையடிக்கே யென்பதுகொள்க. மற்று விரை முதல்வெண்சீர் விருவது முதனின்ற இயற்சீர்ப்பின்னர் இடைநின்ற இயற்சீர்ப்பின்னரென்ப தறியுமாறென்னையெனின், அங்ஙனம் வரை யாது கூறினமையின் முதற்கண்ணதே இவ்விதியென்பதாம். அல்ல தூஉம் அவ்வாறு இயற்சீரினை இடையும் வருமென்றுகொள்ளிற் பதின் மூன்றெழுத்திற் சுருங்கியடிவிலனும் அதுபெறுவான் செல்லும். செல் லவே கலியோசை இனிது பெறலாகாவென மறுக்க. என்னுர்க்குப் பின்வருஞ்சீர் மூன்றும் விரைமுதல்வெண்சீர் வுருவதென்றிலனுதலின் மூன்றுஞ்சீர் நேர்முதல் வெண்சீர்வந்தும் 'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே' (தொல்-செய-29) என்றதனுனும் இடைநிற்பன வெண் சீரென்பது பெறுதுமாகலானும் அது கட்டளையன்றென்பது. இனி முதனின்றது விரையீற்றியற்சீராகலான் துள்ளலோசை பிறவாமையின் அவற்றோசை குறைதீரக் கலித்தளை பலவாகி வரல்வேண்டுமென்பது. இவ்வாற்றான் ஓசைசசுருக்கம் பெருக்கம் உணர்தற்கு அருமைநோக்கி,

> 'அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
> வகுத்தன ருணர்த்தலும் வல்லோர் ராறே' (தொல்-செய்-11.)

என்பானுயிற்றெனவுணர்க. இக்கருத்தினானன்றே விரைமுதல்வெ சீர் வருகவெனவும் விரையீற்றியற்சீர்ப் பின்னர் மாசெல்வாட் மூன்று வரினுஞ் சிறிது கலியோசை பிறக்குமாயினும் அதனைக் கட்டளையடி யென நேரானுயிற்றுமென்பது.* (௬௦)

---

* 'விரையீற் றியற்சீர்ப் பின்னர் வெண்சீரடுக்கிய வெண்டளை வரி னுஞ் சிறிது துள்ளலோசை பிறத்தலின் அதனைச் சீர்வகை யடியென் றுணர்க. உதாரணம்: "அணிமுக மதியேய்ப்ப வம்மதியை நனி யேய்க்கு - மணிநிகழ் மாமழையின் பின்னெறுப்பப் பின்னின்கண்" வருவனவும் பிறவுமாம்' என்பது நச்சினார்க்கினியர் உரை.

373. விரா அய தளையு மொரூஉ நிலை யின்றே.

இது, சீர்வகையான்வரும் கலியடித்தளை விரவினுங் கடியப்படா தென்கின்றது; யாதனோடு விரவியோவெனின் வெண்பாவினோடு விராய்த் தட்பினுமென்றவாறு. என்னை? 'தளைவகை யொன்றாத் தன்மை யான' (தொல்-செய்-58) என வெண்பாவிற்குங் கூறினமை யின்.*

இதன் பொருள்: வெண்சீர் ஒன்றிவருதலுங் கடியப்படா கலிக்கு, என்றவாறு.

'சீர்வகையடிக்கண்' என்பது என்னை பெறுமாறெனின், 'விரா அய தளை'யென்றமையிற் பெறுதுமென்பது. உதாரணம் 'தளைவகை யொன்றாத் தன்மை யான'(தொல்-செய்-58)என்புழிக் காட்டப்பட்டது.(சுக)

374. இயற்சீர் வெள்ளடி யாசிரிய மருங்கி
னிலைக்குரி மரபி னிற்கவும் பெறுமே.

இது, வெண்சீரொன்றிவரும் அடி கலிப்பாவிற்கும் உரித்தென்ற முறையானே, இயற்சீர் வெள்ளடியான் வரும் ஆசிரியத்திற்கு மயங் கியல்வகையான் நிலைக்குரித்தாகி நிற்கவும் பெறுமென்கின்றது.

இதன் பொருள்: அம்மயங்கியல்வகைதான் அப்பாவிற்கு உரிமை பூண்டுநிற்கும்; ஆசிரிய அடியோடு கூடிய கூட்டத்துக்கண், என்றவாறு.

வெண்பாவினுளாயின் ஆசிரியவடி முழுவதுந் தன்றளையோடு வாராது. என்னை?

* நச்சினார்க்கினியர் 'வெண்சீரோடும் ஒழிந்த சீரோடும் விரா அய்த் தட்பினும்' எனக் கூறி "வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர் பெற்ற" (பாலைக்கலி - 24) என்பதனை உதாரணங் காட்டுவர்.

"*தூஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்ததுகொல்
பாஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான்கொன்
†மாஅ மிசையான்கோ னன்ன னறுநுதலார்
மாஅமை யெல்லாம் பசப்பு."

என்பதன் முதலடியுள்ளே தூஉத்தீம்புகை யென ஓர் ஆசிரியத் தளை வர மற்றையன வெண்டளையாகி வந்தமையின். அற்றன்றி முழுவதூஉம் ஆசிரியத்தளைவரின் வெண்பா சிதையுமாகலின் இத னையே சொல்லின்முடிவிலக்கணத்தான் வெண்பாவென்றான். எனவே, வேற்றோசைவிராயவழித் தன்னோசை அழிதல் இதற்குப் பெரும்பான்மையாயிற்று. ஆசிரியமாயின் அவ்வாறு அழியாதென்பது கருத்து. என்போலவோவெனின் பளிங்குடன் அடுத்த பஞ்சி வேற் றுமையால், பளிங்கு வேறுபடினல்லது பஞ்சிவேறுபடாததுபோல வென்பது. இதனானே வெள்ளையென்பது ஒப்பினான் ஆகிய பெய ரென்பதூஉம் பெற்றாம்.

* இவ்வெண்பா, "தூஉய்த் தீப்புகையத் தொல்விசும்பிற் போர்த் ததுகொல் - பாஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான்கொல் -கோன்மா மிசையான்கோ னன்ன னறுநுத - லார்மாமை யெல்லாம் பசப்பு" எனச் சில பாடவேறுபாடுகளுடன், பத்துப்பாட்டு அச்சுப் பிரதியில் மலைபடுகடாஅத்து உரையிறுதியில் காணப்படுகிறது.

ஆசிரியர் நச்சினார்க்கினியர், தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நூன்மரபு ஆறுவது சூத்திர உரையில் "தூஉத் தீம்புகைத் தொல் விசும்பு"........எனச சான்றோர் செய்யுட் கெல்லாம் (அளபெடை) நான்கு மாத்திரை பெற்று நின்றன. அன்றி மூன்றுமாத்திரை பெற்றன வேல், ஆசிரியத்தளை தட்டுச் செப்பலோசை கெடுமாயிற்று. இங்ஙனம் அளபெடாது நின்று ஆசிரியத்தளை தட்டு நிற்பன கலிக்கு உறுப்பா கிய கொச்சக வெண்பாக்கள்; இவை அன்னவன்றென உணர்க"எனக் கூறுமாற்றான், அவர் கொண்டபாடம் 'தூஉத் தீம்புகை' என்பது தெள்ளிது. இப்பாடம் "'தூஉத் தீம்புகை' என ஓர் ஆசிரியத்தளை" வந்ததென்று பேராசிரியர் கூறுவதற்கு முரண்படும்

† 'மாமிசையான் கோன்னன்று நுதலார' என்பது முன் அச்சுப் பிரதிப்பாடம்.

"எறும்பி யளையிற் குறும்பல் சுனைய" (குறுந்-12.)

இவ்வாசிரியத்துள் எல்லாவடியும் பாவேறுபட்டு இசையாமையின் முதற்கணின்ற இயற்சீர் வெள்ளடி நிலைக்குரிமரபின் நின்றதாயிற்று.

"கொலைநவில் வேட்டுவன் கோள்வேட் டெழுந்த
புகர்நுதல் யானை நுதன்மீ தழுத்திய
செங்கோற் கடுங்கணை போலு மெனுஅது
நெஞ்சங் கவர்ந்தோ ணிரையிதழ்க் கண்ணே."*

என்பது செய்யுண்முழுவதும் இயற்சீர் வெள்ளடியான் வந்தது.

மற்று இயற்சீர்வெள்ளடியல்லது பிறவடி ஆசிரியத்துண் மயங்கப்பெறுதோவெனின், அது நிலைக்குரிமரபின் நில்லாமையின் உம்மையால் தழீஇக்கொள்ளப்படுஞ் சிறுபான்மையென்பது. "பாஅல்புளிப்பினும் பகலிருளினும்" (புறம்-2) என்றாற்போல்வன. "மாவழங்கு பெருங்காட்டு மழகன்று காணாது" என்னும் ஆசிரியவடியினைக் கலிப்பா மயங்கிற் றென்பாரும் உளர். அது †துள்ளச்செல்லுங்கால் அளபெடுக்கவேண்டுமெனக்கூறி மறுக்க. (சுஉ)

375. வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு
ஐஞ்சீ ரடியு முளவென மொழிப.

இஃது ஐஞ்சீரடியும் வருமாறு கூறுகின்றது.

இதன் பொருள்: மேனின்ற அதிகாரத்தாற் கலிப்பாவிற்கு ஐஞ்சீரடியும் உள, என்றவாறு.

---

* 'இது வெள்ளடி முழுதும் வந்தது என்று பேராசிரியர் காட்டினார். இதனை அகவலோசை பிறக்கும் என்று கொள்ளின் இயற்சீர் வெண்டளையான் வருமென்ற கட்டளை வெண்பா இன்றாமெனமறுக்க' என்பர் நச்சினார்க்கினியர்.

† 'துள்ளச் சொல்லுங்கால்' என்பதும் பாடம்.

'வெண்டளைவிரவியும் ஆசிரியம்விரவியும்' என்றது என்னையெனின், அவ்வைஞ்சீரடி வெண்பாவோடு விராயும் ஆசிரியப்பாவோடு விராயும் வருமென்றவாறு. ஈண்டுத் தளையென்றது அப்பாக்களையாதலான் அப் பாக்களோடு *விரவுமெனவே, அப்பாக்களை உறுப்பாகவரும் பிறசெய் யுட் கண்ணும் அவ்வைஞ்சீரடி வருமென்பது பெற்றாம். வெண்டளை யொடு விரவுமெனவே ஐஞ்சீரடி அவற்றுக்கு உரியவல்லவென்பதாம். எனவே, கலிப்பாவின்கண்வரும் ஐஞ்சீரடியாயின் அக்கலியோசைக்கு உரிமையுடைத்தென்பதாம்.

உளவெனவே, ஐஞ்சீரடி கலியினுட் பயின்றுவருமென்பதூஉம் அல்லனவற்றுட் பயிலாவெனவுங் கொள்க. 'விராய தளையு மொரூஉ நிலை யின்று' (தொல்-செய்-61) எனப்பட்ட கலிப்பாவினோடு இயைபு பட்ட வெண்பாவடியும் அதனோடு இயைபுபட்ட ஆசிரியவடியுங்கூறி, அம்மூன்றனையும் உடன்கூறினுனாயினும், ஆண்டுச் சிறந்தவாறே ஈண் டும் அவ்வதிகாரத்ததாக நாட்டி, ஐஞ்சீரடியும் உளவென்று ஆண்டு நின்ற கலிக்குக்கூறிய அவ்வடி வெண்டளைவிரவியும் ஆசிரியம்விரவியும் வருமெனப் பிறவற்றுக்குங் கூறினனென்பது.

ஐஞ்சீரடியென்பதனை அளவடி மூன்று பாவிற்கு உரித்தென் றால் அவ்வப்பாவிற்கு வேறுவேறு கொண்டாற்போல, ஐஞ்சீரடியும் பாத்தோறும் வேறுபடுத்துக்கொள்க.

உதாரணம்:

"தகைமிகு தொகைவகை யறிவுஞ் சான்றவ ரினமாக" (கலி-39.) †எனக் கலிப்பாவினுள் ஐஞ்சீரடிவந்தது.

"அரவணிந்த கொடிவெய்யோ ‡னகம்புக்கா னரவையகன் றகற் றியே" எனக் கலியடி வெண்சீரான் வந்தது.

---

* 'விரவு கெனவே' என்பதும் பாடம்.

† 'என்னும்' என்பது முன் அச்சுப்பிரதிப் பாடம்.

‡ 'அகம்புக்கா னரசவையகன் றகற்றியே' எனவும், 'அகம்புக்கா னவையகன் றகற்றியே' எனவும் பாடமுண்டு.

"கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க
ஒண்செங் குருதியி *னோஓ கிடட்பதே சென்டிக்
கெழுதகை யில்லேன் கிடந்தூடப் பன்று
எழுதகண் ணீர்துடைத்த கை."

என்னும் வெண்பாவினுள் இரண்டாமடி ஐஞ்சீரான் வந்தது.

"சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே"
(புறம்-235.)

என்பன ஐஞ்சீரான்வந்த ஆசிரியவடி. ஆசிரியத்துள் இவ்வாறு இரண்டடி ஒருங்கு நிற்குமென்பது அறிவித்தற்கு ஐஞ்சீரடிக்குச் சிறந்த கலிப்பாவோடு வைத்தான் அதனை முறைபிறழவென்பது. எனவே, வெண்பாவிற்கு ஐஞ்சீரடி ஒன்றல்லது வாராதாயிற்று. இக் கருத்தேபற்றி,

"ஐஞ்சீ ரடுக்கலு மண்டில மாகலும்
வெண்பா யாப்பிற் குரிய வல்ல"

என்றார் †பிறருமென்க.

உம்மையான் ‡ இருசீரடியுங் கலியடியாம்.

"மன்று பார்த்து
நின்று தாயைக்
கன்று பார்க்கு
மின்றும் வாரா"

எனக் கொச்சகக்கலியுள் இருசீர் வந்தது.

* 'ஓஒ' என்பதும் பாடம்.

† நக்கீரர் என யாப்பருங்கல விருத்தியால் தெரிகிறது.

‡ 'ஐஞ்சீரடியும்' என்ற உம்மையான்.

மூன்றுபாவிற்கும் முச்சீரடி உரித்தென்பது முன்னர்ச்சொல்லும் வரையாது கூறினமையின் கலிப்பாவிற்காயின் ஐஞ்சீரடி வருங்கால் தளைவிரவியும் விரவாதும் வேண்டியவாறு வரப்பெறுமென்பது. (சுஐ)

376. அறுசீ ரடியே யாசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉ நேரடி முன்னே.

இது, முறையானே அறுசீரடியுங் கலிப்பாவிற்கு உரித்தென்

இதன் பொருள்: *நாற்சீரடி முன்னும் பின்னும் அறுசீரடியும் வருதலுமுண்டு. அன்னது வருங்கால் தனக்குரிய வெண்டளையே யன்றி ஆசிரியத்தளையொடும் வழக்குப் பெற்று நடக்குங் கலிப்பாவி னுள், என்றவாறு.

'நெறிபெற்றுவரும்' என்றதனாற் சிறுபான்மை நேரடி இடையிட் டன்றி ஒருசெய்யுள் முழுவதூஉந் தானே வருதலுங் கொள்க. 'ஆசி ரியத்தளையொடும்' என்ற உம்மையாற் கலி தனக்குரிய வெண்டளையான் வருதலும் மயங்கிவருதலும் உரியவாம்.

"முன்னைத்தஞ் சிற்றின் முழங்கு கடலோத மூழ்கிப் பெயர *
வன்னைக் குரைப்ப னறிவாய் கடலேயென் றல்லிப் பெயருந்†
‡தன்மை மடவார் தணந்துகுத்த வெண்முத்தம்
புன்னையரும் பேயென்னப் போவாரைப் பேதுறுக்கும் புகாரே
[யெம்மூர்."

---

* இதுவே ஏட்டுப்பிரதிப்பாடம். 'நாற்சீரடியும்' என்று முன் அச்சுப்பிரதியில் உள்ளது. அது பொருட்பேறின்மை காண்க.

† 'பேரும்' என்பதும் பாடம்.

‡ 'தன்மை மடவார் * தணந்துகுத்த வெண்முத்தம் தலைச்சாக் கானல்' என்பதும் பாடம். இப்பாடங் கொள்ளில் இவ்வடி நேரடி யாதலில்லை.

என்பது மூன்றும் அடி நேரடியாக முன்னும் பின்னும் அறுசீர் வந்தது. பிறவுமன்ன.

> " கரைபொரு கான்யாற்றங் கல்லத ரெம்முள்ளி வருதி ராயின்
> அரையிருள் யாமத் தடுபுலியோ நும்மஞ்சி யகன்று போக
> நரையுருமே றுங்கைவே லஞ்சுக நும்மை
> வரையர மங்கையர் வெளவுத லஞ்சுதும் வாரலையோ "

என்பதன் முதலடியுள் 'வருதி ராயின்' என்பது ஆசிரியத்தளை. ஒழிந்தன வெண்டளை. முன்னென்றதனான் இடமுன்னுங் காலமுன்னுங் கொள்ளப்படும்.

> "தொக்குத் துறைப்படியுந் தொண்டையஞ்செவ் வாய்மகளிர்
> தோண்மேற் பெய்வான்
> கைக்கொண்ட நீருட் கருங்கண் பிறழ்வ
> கயலென் றெண்ணி
> மெய்க்கென்னும் மெய்கல்லார் மீண்டுகரைக் கேசொரிந்து
> மீள்வார் காணு
> ரெக்கர் மணற்கிளைக்கு மேழை மகளிர்க்கே
> யெறிநீர்க் கொற்கை.''

எனச் செய்யுண்முழுவதும் அறுசீரடியே வந்தது.

> "வளைபுரை கிறைபோத்து மணநாறு
> *நறுநுதல் பொருட்டு வந்தோய்"

என ஆசிரியத்தளையானும் அறுசீரடி வந்தது.

மற்றுத் தளையென்றோதுவது கட்டளையடிக்கென்றீரால், ஈண்டுத் தளையென்றதென்னை யெனின், அவ்வரையறை ஒருவன்சொல்லுவது: அறுசீரடி வருங்கால் முதற்கண் நேரடி தாங்கிப் பின் இருசீரொடு தொடுத்தல் வேண்டும் என்னும். அஃது இச்சூத்திரத்திற்கேலாது;

---

* 'நறுநுதலார்' என்பதும் பாடம்.

நேரடிமுன் அறுசீர் வரினென்பது பதின்சீரடியாமாகலின். அல்லதூஉங் குறளடி தூங்கியுஞ் சிந்தடி தூங்கியும் அறுசீரடி வருதலின் அஃது அமையாதென்பது. என்னை?

"வாராது நீத்தகன்றார், வருமாறு பார்த்திருந்தார், வடிக்கண் போல"

என்றவழி இருசீரான் யாத்தமையின் அது தூக்கெனப்படாது;

"செங்காந்தள் கைகாட்டுங்காலஞ்,சேட்சென்றார் வாரார்கொல் பாவம்"

என முச்சீரான் யாத்தமையின் அதுவுந் தூக்கெனப்படாது; அறுசீரடியே தூக்காகக் கொண்டமையின், நேரடி முன் இருசீரடி வந்ததென்றதூஉம் பிழைக்குமென்பது. (சுசு)

377. எழுசீ ரடியே முடுகிய னடக்கும்.

இஃது, எழுசீரான்வரும் அடி கூறுகின்றது.

இதன் பொருள்: எழுசீரான் வருமளவும் அடியுள; அவை பயின்று நடப்பது முடுகியற்கண், என்றவாறு.

எனவே, முடுகாதவழி அத்துணை நடையாட்டம் இல *எழுசீரடி என்பதாம். பாவென்னும் உறுப்பு இடனுகும். ஏகாரம் பிரிநிலை.

"தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை
தழலென விரிவன பொழில்"

எனவும்,

"கவிரிதழ் கதுவிய துவரித ழரிவையர்
கலிமயிற் கணமொடு விளையாட"

எனவும் எழுசீரடி முடுகிவந்தது. இவை பரிபாடலுள்ளுங் கலியுள்ளுங் காணப்படும். முடுகாது வரும் எழுசீரடி வந்தவழிக் கண்டு கொள்க. (சஎ)

* 'எழுசீரடிக்கு' என்பதும் பாடம்.

## 378. முடுகியல் வரையார் முதலீ ரடிக்கும்.

இஃது, எய்தாத தெய்வித்தது ; எழுசீரடியேயன்றி ஐஞ்சீரடியும் அறுசீரடியும் அராகந் தொடுக்குமென்றமையின்.

இதன் பொருள்: எழுசீரடிக்கு முன்னர் இடைநின்ற ஐஞ்சீரடியும் அறுசீரடியும் முடுகியல் நீக்கார், என்றவாறு. அவற்றுக்குச் செய்யுள்:

"காரெதிர் கலியொலி கடியிடி யுருமி னியங்கறங்க
நேரிதழ் நிரைநிரை நெறிவெறிக் கோதைய ரணிநிற்ப"
(கலி-105.)

என ஐஞ்சீரடி முடுகிவந்தது.

"மலர்மலி புகலெழ வலர்மலிர்
மணிபுரை *நிமிர்தோள் பிணைஇ" (கலி-102.)

என்பது அறுசீரடி முடுகிற்று.

முதல் ஈரடிக்கும் என்ற உம்மை எச்சவும்மை. அவ்வும்மையால் நாற்சீரடியும் இத்துணைப் பயிலாது முடுகுமென்பது.

"புரிபு புரிபு புக்க பொதுவரைத்
தெரிபு தெரிபு குத்தின வேறு" (கலி-103.)

என வரும்.

"இரிபெழு பதிர்பதிர் பிகழ்ந்துடன் பலர்நீங்க
வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன்
கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும்
†வாடில் வெகுளி யெழிலேறு கண்டை யிஃதொன்று"
(கலி-104.)

என்பதனுள் முடுகியலடி இரண்டும் வந்தன.

---

* 'நிரைதோள் பணைஇ' என்பதும் பாடம்.

† 'வாடா' என்பதும் பாடம்.

மற்று இவற்றை *அராகமென்னுமோவெனின், அதனைப் பரிபாட்டிற்கு உறுப்பென்றமையாற் பிறவடியொடு தொடராகிற்று வரவேண்டும், †இஃது அன்ன தன்றென்பது. எழுசீரடியிற் சிறுவரவினவாக லான் ஐஞ்சீரடியினையும் அறுசீரடியினையும் வரையாரென்றான். அவற்றினுஞ் சிறுவரவிற்றாகலின் இதனை உம்மையாற்கொண்டான். முற்றும்மையாகாதோவெனின் அதுவும் எசசப்படுதலின் அமையுமென்பது. அல்லதூஉம் முதலடியிரண்டே அன்மையின் முற்றாகாதென்பது. (௬௬)

379 ஆசிரிய மருங்கினும் வெண்பா மருங்கினு
மூவகை யடியு முன்னுத லிலவே.

இது, முடுகியல் இன்னபாவிற்கு உரித்தென்கின்றது ; எய்தியதிகந்துபடாமற் காக்கினறதூஉமாம்: என்னை ? நாற்சீரடிமுதன் மூன்றும் அகவலோசைக்குஞ் செப்பலோசைக்கும் உரியவெனவே, அவை முடுகி ஆண்டுஞ் சேறலெய்தியதனைக் கலிப்பாவிற்கல்லது ஆகாதென்றமையின்.

இதன் பொருள்: ஆசிரியம் வெண்பா என்னும் இரண்டுபாவினும் முடுகியலடி மூன்றும புகா, என்றவாறு.

உம்மை முற்றும்மை. மற்றை முசசீரடியோடு நான்கென்னுதோவெனின், அஃது இவற்றுக்கு ஈண்டு ஒவ்வாது. முடுகிவருதல் பெரும்பான்மைத்தாகலின் மூவகையடியென அடையடுத்துக் கூறினா

* 'அராகமாவது பிறிதொன்றனோடு கூட்டி ஆற்றுவியாமல், தானேபோய் அற்றுநிற்பதாம். அது பரிபாடற் செய்யுளுறுப்பென்பர். இது (இச் சூத்திரத்துக் கூறிய முடுகியல்) பிறிதொன்றனோடு கூட்டி ஆற்றுவித்துக் கோடற் குரித்தாம். இவ் வேறுபாடு அறிக' என்பது நச்சினார்க்கினியர் உரை.

† 'இஃது' என்பது ஏட்டுப் பிரதிப்பாடம். 'அஃது' என்பது முன் அச்சுப் பிரதியில் உள்ள பாடம்.

னென்பது. அல்லதூஉம் எழுசீரடி விலக்கானன்றே, அதனை ஆசிரிய மருங்கினும் வெண்பாமருங்கினும் மயங்குக என்றதுண்மையினென்பது.

இனி, அறுசீரடி ஆசிரியத்தளையோடும் வருமென்றது அகவலோசைக்கு உரித்தென்றமையானும், வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும் ஐஞ்சீரடியும் வருமென்றமையானும் அவற்றை அளவடியுடன் எடுத்தோதி விலக்கினன். மூவகை அடியுமென்றது ஐஞ்சீரடி முதன் மூன்றுமெனப்படுமென்பார், அளவடி முடிகுதல் ஆசிரியத்திற்கும் உரிமையின் அதுவரையறையின்றென்றலும் ஒன்று. அது,

"திருமழை தலைஇய விருணிற விசும்பின்" (பத்து-மலைபடு-1.)

என வரும். அதற்கு முடிகியற்றன்மை இன்றென்றது கருத்து. வஞ்சிப்பாவிற்குக் குறளுஞ் சிந்தும் அல்லது இன்மையின் இவ்வாராய்ச்சி இன்றென்பது.

எனவே, ஆசிரியத்தளையோடு *முடுகிய வடியினைக் கலியடியென்றும் முடுகாத அறுசீரடி ஆசிரியத்தளையோடு நெறிபெற்று வருதற்கும் கலிப்பாவிற்குச் †சிறுபான்மையான் வருமென்பதூஉஞ் சொல்லப்பட்டது. அல்லாதார் ஐஞ்சீரடி முதலிய மூன்றுங் கலிக்குரிய, பிறபாவிற்கு உரியவல்ல என்றற்கு வந்தது இச்சூத்திரமென்ப. அற்றன்று ; அங்ஙனங் கூறில் தாம்வேண்டும் ஐஞ்சீரடி ஆசிரியத்துள்ளும் புகாதென்று மறுக்க. முன்னுதலிலவென்றது யாண்டுமாகா தென்றவாறு. இவ்விலக்கணமெல்லாம் மேற்காட்டிய செய்யுளுள்ளே கண்டறிந்துகொள்க. (கஎ)

380. ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற்
றோற்ற முச்சீர்த் தாகு மென்ப. (கஅ)

381. இடையும் வரையார் தொடையுணர் வோரே.

---

* 'முடுகியலடியினை' என்பதும் பாடம்.

† 'சிறுமையான்' என்பது முன் அச்சுப்பிரதிப்பாடம்.

இவை இரண்டுசூத்திரமும் *உரை யிடைபுநோக்கி உடனெழுதப்பட்டன. இவை, ஆசிரியத்துட் சிந்தடிவருமென்றமையின் எய்தாத தெய்துவித்தனவாம்.

இதன் பொருள்: ஆசிரியத்துள் எருத்தடியொன்றும் இடையடியிரண்டுமாகி முச்சீரடி வரும், என்றவாறு.

முச்சீர்த்தென்று ஒருமைகூறினமையின் அஃது ஒன்றாகலும், தொடையுணர்வோ ரென்றமையின் இடைவருவன இரண்டாகலுங் கூறினனென்பது. 'இடையும் வரையார்' என்றமையான் ஈற்றயன் முச்சீர்த்தாதல் பெரும்பான்மை.

உதாரணம்:

"நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே" (புறம்-1.)

என அப்பாட்டினை முழுவதூஉங் கொள்ள ஈற்றயலடி முச்சீர்த்தாயிற்று.

"நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ்
சாரச் சார்ந்து தீரத் தீருஞ்
சார லடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாதே."

என்பதனுட் 'சார லடன் கேண்மை' எனவுஞ் 'சாரச் சாரச் சார்ந்து' எனவும் முச்சீரடி இரண்டு வந்தன. ஏகாரம் பிரிநிலை. மற்று,

"நரந்த நாறுந் தன்கையாற்
புலவுநாறு மென்றலை தைவரு மன்னே" (புறம்-235.)

என முச்சீரடி இடையும் ஒன்று வந்ததாலெனின், தோற்ற மென்றதனான் எருத்தடி முச்சீராய காலத்துக் குட்டம்பட்டும் இனிது

* 'முறை யிடையு' என்பது முன் அச்சுப் பிரதிப் பாடம்.

விளங்கும். இடையிடை ஒன்று வருதலும் உண்டாயினும் அத்துணை இனிதன்று அது வெண்பாதுகொள்க. "பெரியகட் பெறினே" (புறம்-235) என இருசீரடி வந்ததாலெனின், அதனைச் சொற்சீரடி யென்று கொள்க.* "உப்பிலாஅ அவிப்புழுக்கல்-கைக்கொண்டு பிறக்கு நோக்காது" (புறம்-363) எனவுங் காட்டுப. இவை வஞ்சியடியெனப் படுமென்பது. வெண்சீரான் வஞ்சியடிவருமோவெனின், வாரா; வஞ்சிச்சீர் விரவினல்லதென்பது. "உப்பிலாஅ அவிப்புழுக்கல்" என்பதோவெனின், அது மற்றை இரு சீரடியொடு கூட்டத்துக் காட்டலானும் வஞ்சியடிபோன்றது. (சுக)

## 382. முச்சீர் முரற்கையு ணிறையவு நிற்கும்.

இது, கலிப்பாவிற்கு அளவடியும் நெடிலடியும் அதனினிறந்த அடியும் உரிமைகூறி இனிச் சிந்தடியும் உரித்தென்கின்றது.

இதன் பொருள்: கலிப்பாவினுண் முச்சீரடி நிரம்பவும் நிற்கும், என்றவாறு.

நிறையநிற்றலென்பது அச்செய்யுண்முழுவதும் அவ்வடியே வருத லாம். உம்மையான் ஒரு செய்யுணிறைய வாராது ஒன்றும் இரண்டும் பலவுமாகி அம்முச்சீரடி வருதல் பெருவரவிற்றென்பது. தாங் குறைந்த அடியாதலிற் கலிப்பாவிற்கு உறுப்பாகிய சின்னத்துக் குறைய நிற்கும் இயல்பினவாயினும், நிறைய நிற்றலுடைய கொச்சகத்து ளென்றவாறு. "செய்தானக் கள்வன் மகன்" (கலி-51) எனவே வெண்கலியுள் இறுதிக்கணல்லது வாராது. "நின்கண்ணாற் காண

* 'இதனைக் குறளடியாக்கிக் குறளடியும் வருமென்பர் பின்பு நூல்செய்த ஆசிரியர்' என்றார் நச்சினார்க்கினியர். யாப்பருங்கல விருத்திகாரர் இருசீரடியும் முச்சீரடியும் இடையிடை விரவிவரும் ஆசிரியமுமுள, என்றும் அவை இணைக்குறளாசிரியப்பா எனப்படு மென்றும் கூறி, காக்கைபாடினியத்தினின்றும் மேற்கோள் காட்டு கின்றார்.

டென்மன் டான்" (கலி-39) என்பது இடைவந்தது. எண் உறுப்பு பின்கண் இரண்டும் நான்கும் வருமாறு கண்டுகொள்க.

"நீர்வரக் கண்கலுழ்ந் தாங்குக்
கார்வரக் கண்டனங் காதலர்
தேர்வரக் கண்டில மன்றோ
பீர்வரக் கண்டனந் தோளே."

என முச்சீரடி ஒருசெய்யுள் நிறையவும் வந்தவாறு.* (எ0)

## 383. வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே.

இது, முறையானே அடியுரிமை கூறியவாற்றான் வஞ்சிப்பாவிற்குக் கூறியதிலன். எற்றக்கு? அது, 'வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்' (தொல்-செய-45) எனவும் 'முச்சீ ரானும் வருமிட னுடைத்து' (தொல்-செய்-47) எனவும் மேற் கூறப்பட்டமையின். அதுநோக்கி அடியுரிமைகூறப்படாத வஞ்சிப்பாவிற்கு வஞ்சியினது ஈற்றடியும் அவ் விருசீரடியும் முச்சீரடியுமாவன சென்றதனை விலக்கி இன்ன அடியான் முடியுமென்கின்றது.

இதன் பொருள்: வஞ்சிப்பாவினது இறுதியடி ஆசிரியவடி இறுதிபோன்று இறுக, என்றவாறு.

எனவே, ஆசிரியத்திற்கு ஓதிய சீரானும் தளையானும் இறுமென்றவாறு.

"மாக்கட னிவந்தெழுந்த
செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ
வினையை யாகன்மாறே

* 'வெள்ளோசையினால் வருவதனைக் கலிவெண்பா வென்றும், பிறவாற்றால் வருவனவற்றை வெண்கலிப்பாவென்றும் வேறுபடுத்துச் சொல்வாருமுளர்' என்பது யாப்பருங்கலவிருத்தி.

தாயி றுவ்வாக் குழவி போல
வோவா தூ கூஉமின் னுடற்றியோர் நாடே." (புறம்-4.)

என மண்டிலவாசிரியத்தா னிற்றது.

செந்தூக்கியற்றேயென்ற மாட்டேற்றானே, 'ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற்-றோற்ற முச்சீர்த் தாகுமென்ப' (தொல்-செய்-68) எனவும், 'இடையும் வரையார் தொடையுணர் வோரே' (தொல்-செய்-69) எனவும் எய்தியவிதி ஈண்டும் எய்துவிக்க. "அனையை யாகன் மாறே" (புறம்-4) என முச்சீரடி இடைவந்தது.

"*இழைபெற்ற பாடினிக்குக்
குரல்புணர்சீர்க் கொளைவலபாண்
மகனும்மே யெனவாங்
கொள்ளழற் †புணர்ந்த தாமரை
வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே." (புறம்-11.)

இஃது ஈற்றயலடி முச்சீர்த்தாகி வந்த செந்தூக்கியற்றாகி இற்ற வஞ்சிப்பா. பிறவும் அன்ன. ஈண்டுத் தனிச்சொல் வேண்டுமென்று பிற்காலத்து நூல்செய்தாரும் உளர். அது சான்றோர்செய்யுள் எல்லாவற்றோடும் பொருந்தாமையானும், பிற்காலத்திற்செய்த நூல்பற்றி முற்காலத்துச் செய்யுட்கெல்லாம் இலக்கணஞ்சேர்த்துதல் பயமின்றாதலானும் அஃதமையாதென்பது. வஞ்சிப்பாவின் ஈற்றடி வரைந்தோதவே இடையாயின எல்லா அடியும் வரப்பெறுமென்பதாம்.

"நேரிழை மகளி ருணங்குணாக் கவருங்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை"

(பத்து-பட்டி-23-24.)

என ஆசிரியவடியும் வெண்பாவடியும் இடைவந்தன.‡ (எக)

---

* 'இழைபெற்றபாடினிக்குக் குரல்புணர்ச்சீர்' என்பது முன் அச்சுப்பிரதிப்பாடம்.

† 'புரந்த' என்பதும் பாடம்.

‡ 'ஆசிரியவடியும் வெண்பாவடியும் இடைவந்தன' என்பதனுள்

384. வெண்பாட் டீற்றடி முச்சீர்த் தாகும்.

இது, வெண்பாவிற்கு ஈறு உணர்த்துகின்றது. *ஆசிரியத்துக் கோவெனின், தனக்கோதிய அளவடியானே இறுதலின் வேறுபாடு கூறவேண்டா. எருத்தடியும் இடையும் முச்சீரான்வருமெனவேறு படுவழிக் கூறி, அல்லாதன அளவடியாதல் கொள்ளவைத்தானென் பது.

இதன் பொருள் : வெண்பாவின் இறுதியடி ஒன்றும் முச்சீரான் அன்றி வாராது, என்றவாறு. அவை முன்னர்க் காட்டுதும். அஃதேல்,

"அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலு நண்பல்லார் நண்பல்லர்"† (மூதுரை.)

என முச்சீரடி இடையும் வந்ததால் வெண்பாவினுளெனின், முச்சீர்த் தென்னாது 'ஆகும்' என்று ஆக்கங்கூறக் கொடுத்தமையான் அத்துணை ஆக்கமின்றி இடையுஞ் சிறுபான்மை வருமெனக்கொள்க. அல்லா தார் அதனை வெண்பாவன்றென்ப. (எஉ)

பேராசிரியர் 'பட்டினப்பாலை'யினை வஞ்சிப்பாட் டென்றே கொண்டாரென்பது தெளியப்பட்டது. யாப்பருங்கலவிருத்தியுரை காரரும் 'பட்டினப் பாலையென்னும் வஞ்சி நெடும்பாட்டினுள்' என்றார். நச்சினார்க்கினியர் பேராசிரியர் மேற்காட்டிய பட்டினப் பாலையடிகளையே உதாரணங்காட்டி 'என ஆசிரியவடியும் வெள்ளடியும் இடைவந்தன' எனக் கூறுமாற்றான், அவர்க்கும் அதுவே கருத்தாதல் காண்க.

* 'ஆசிரியத்தூக்கோ' என்பது முன் அச்சுப்பிரதிப்பாடம்.

† 'அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும்'

என்னும் இவ்வெண்பாவின் இடையே முச்சீரடி கண்டு மயங்கிய பிற்காலத்தார், 'கெட்டாலும்' என்பதைத் தனிச்சீராக்கி, 'தான்மிக்க . வெண்மை தரும்' என இருசொற்கள் மிகையாகப் பெய்து, வெண் பாவைச் சீர்ப்படுத்திவிட்டனர்!

## 385. அசைசீர்த் தாகு மவ்வயி னான.

இது, மேலதற்கெய்தியதோர்விதி.

இதன் பொருள் : வெண்பாவின் இறுதிவரும் முச்சீரடிஈற்றுச் சீர் வரப்பெறுவது அசைச்சீரல்லாது, என்றவாறு.

மேல் 'அசைநிலை வரையார் சீர்நிலை பெறல்' (தொல்-செய்-27) என்றான், அவற்றள் உரியசைச்சீர் முதலும் இடையும் இறுதியும் வருமென்பான் 'இயற்சீர்ப் பாற்படுத்து' (தொல்-செய்-28) இயற்றுக என்றான். அவ்வாறே இயலசைச்சீரும் முச்சீரடி இறுதிவருமென்பது ஈண்டுக் கூறியவாறு. (எக)

## 386. நேரீற் றியற்சீர் நிரையு நிரைபுஞ் சேரிற் றாஉ மியற்கைய வென்ப.

இது, மேற் கூறப்பட்ட இயற்சீர் நான்கும் வருங்கால் இன்னுழி நின்று இன்னவாறு கொள்ளப்படுமென்ப துணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : நேரிறுதி வந்த நிரையும் நிரைபுமே இறுதிச் சீராய் நிற்பன, என்றவாறு.

எனவே, தனிவந்த நிரையும் நிரைபும் நிரைமுதற்சீர்போலத் தளைகொள்ளப்படு மென்பதாம். 'எற்றிறாஉம்' என்ற இலேசினான் இடைவந்த நிரைபசையும் அவ்வாறு கொள்க. அஃது 'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளின்' (தொல்-செய்-28) என்பதனான் அடங்காதோவெனின் அடங்காது. என்னை ? அசைச்சீர்தான் அடங்குமாற்றுக்கு ஆண்டுக் கூறினான், அது பிறிதுசீர் அசைச்சீரொடு தட்குமாற்றுக்குங் கூறல்வேண்டுமென்பது. அல்லதூஉம் ஆண்டு அளவடிச்குக் கூறினான் இது சிந்தடிக்கென்பது. வரலாறு :

"*வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்ந்தனபோ
லேரிய வாயினு †மென்செய்ய—கூரியவேற்
கோட்டியானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்
‡கோட்டுமணங் கொள்ளா முலை.'' (முத்தொள்ளாயிரம்)

எனவும்,

* 'வாருயர் பெண்ணை' என்பதும் பாடம்.

† 'என்செய்யும்' என்பதும் பாடம்.

‡ 'கோட்டுமண்' என்பதும் பாடம்.

"அயிற்கதவம் பாய்ந்துழக்கி *யாழித்தேர் குத்தி
யெயிற்கதவங் கோத்தெடுத்த கோட்டாற்—பனிக்கடலுட்
†பாய்செய்த நாவாய்போற் றோன்றிற்றே யெங்கோமான்
காய்சினவேற் ‡கோதை களிறு." (முத்தொள்ளாயிரம்.)

எனவும் இவற்றினுட் 'கொள்ளா' எனவும் 'கோதை' எனவும் நின்ற நேரீற்றியற்சீர் முன்னர் முலையெனவுங் களிறெனவும் நிரையும் நிரை புஞ்சீரேற்றவாறும் வெண்பாட்டீற்றடி முச்சீர்த்தாயவாறும் ஆண்டு அசைச்சீராய் வந்தவாறுங் கண்டுகொள்க.

என்றார்க்கு, முச்சீரடியின் முதற்சீர்க்குத் தளைகூறாரோ வெனின், ஆண்டுத் தளைவகையின்றியும் வருதலின், அதனை வரைந்து கூறாரென்பது. என்னை? 'கோட்டுமணங் கொள்ளா முலை' எனவுங் 'காய்சினவேற் கோதை களிறு' எனவுந் தளைவகையான் வந்தன.

"உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
§செறாஅய் வாழியென் னெஞ்சு." (குறள்-120-10.)

எனவும்,

"கலாஅற் கிளிகடியுங் கானக நாட
$இலாஅர்க் கில்லை தமர்" (நாலடி-29-3.)

எனவும் தளைவகையின்றி வந்தன.|| (எசு)

* 'ஆற்றல்சான் மன்னர்' என்பதும் பாடம்.

† 'பாய்மீதாய்ந்த நாவாய்போற் றோன்றிற்றே' என்பதும் பாடம்.

‡ 'கிள்ளி களிறு' என்பதும் பாடம்.

§ இஃது ஏட்டுப் பிரதிப் பாடம். 'செறாஅஅய்' என்பது முன் அச்சுப்பிரதியின் பாடம்.

$ இதுவும் ஏட்டுப் பிரதிப் பாடம். 'இலாஅஅர்க்கில்லை' என்பது முன் அச்சுப்பிரதியின் பாடம்.

|| 'செறாஅஅய் வாழி' 'இலாஅஅர்க் கில்லை' என ஈரளபு கொடுத்து வெண்சீராக்கின், அவை தளைவகையான் வந்தன வாதலே

387. நிரையவ ணிற்பி னேரு நேர்பும்
வரையின் றென்ப வாய்மொழிப் புலவர்.

இஃது, ஒழிந்த அசைச்சீர் நிரையீற்றுப் பின்னன்றி வாராவென்

இதன் பொருள் : நேரீற்றியற்சீர் நின்றவழி நிரையீற்றியற்சீர் நிற்பினென்பான் 'நிரையவண் நிற்பின்' என்றான், ஆண்டு நிரையும் நிரைபும் வரில் தளைவழுவாமாதலான் நேரும் நேர்புமே வந்து சீரேற்று முடிதல் வரைவின்று, என்றவாறு.

"கொழுநனை மைந்தன் கொணர்ந்ததற் காக
முழுமுலை பாய்ந்தன பால்"

எனவும்,

"வண்டொன்று வந்தது வாரற் பனிவாடாய்
பண்டன்று பட்டினங் காப்பு" (முத்தொள்ளாயிரம்.)

எனவும் இவற்றுட் பாய்ந்தனவெனவும் பட்டினமெனவும் வந்த நிரையீற்றியற்சீர்ப்பின்னர் நேரும் நேர்பும் வந்தன. முன்னர் 'நேரீற்றியற்சீர் நிரைபு நிரைபும்' (தொல்-செய்-74) எனக் கூறி ஈண்டு நிரையவண் நிற்பினெனச் சுட்டிக்கூறியவதனானே அதுவும் நிரையீற்

யன்றித் தளைவகையின்றி வந்தன வாகா. பேராசிரியர் ஈரளபுகொண்டிலரென்பதும், 'செறுஅப் வாழி' 'இலாஅர்க்கில்லை' என ஆசிரியத்தளை தட்டு, வெண்பாவிற்குரிய தளைவகையின்றி வந்தனவென்றே கொண்டன ரென்பதும் உய்த்துணர்க. இவ்வியல் 62-வது சூத்திர வுரையினும் 'தூஉத் தீம்புகை' என வெண்பாவில் ஆசிரியத்தளை வந்ததாகக் காட்டினர். மற்று, நச்சினார்க்கினியரோ, 'தூஉத் தீம்புகை' 'இலாஅர்க் கில்லை' என ஈரளபு கொடுத்து வெண்டளை பிழையாமற் காட்டினர். (தொலகாப்பியம், எழுத்ததிகாரம் நூன்மரபு 6-வது சூத்திரம், நச்சினார்க்கினியர் உரையிற் காண்க.)

றியற்சீரென்பதூஉம் அஃதிரண்டாஞ்சீ ரென்பதூஉங் கொள்க. அல்லாதார் அதனை வெண்சீர்க்கும் பொதுவெனக் கூறி 'வெண்சீர்ற் றசை நிரையசை யியற்றே' (தொல்-செய்-29) என்றதனான் வெண்சீரிறுதி நிரையாகஇபற்றி அதன் அடிப்பின் நேர்பசை கொடுப்ப; "எய்போற் கிடந்தானென் னேறு" என்புழிக் 'கிடந்தானென்' என நின்ற புலிசெல்வாயினைக் கணவிரியாக இபற்றி, 'நிரையவ ணிற்பின் நேரும் நேர்பும்' என்றதனான் ஏறு என்னும் நேர்பசை கொடுப்பர். அஃது ஈண்டு ஆராய்ச்சியின்றென்பது. என்னை? இது கட்டளையடியன்மையின். (எடு)

388. எழுசீ ரிறுதி யாசிரியங் கலியே. (எகூ)

389. வெண்பா வியலினும் பண்புற முடியும். (எஎ)

இவை இரண்டு சூத்திரமும் முறைபானே கலிப்பாவிற்கு, அன்னதோர் அடி அதற்கு வகுத்தில்லாமையின், வகுக்கின்றது.

*என்றூர்க்கு, முதலது நேரடியும் ஈற்றது சிந்தடியுமாகக் கொள்ளல் அவ்வெழு நிலைபுமெனின் அங்ஙனங் கொள்ளாமைக்கன்றே 'ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற்—றூற்ற முச்சீர்த் தாகு மென்ப' (தொல்-செய்-68) எனவும், 'இடையும் வரையார் தொடையுணர் வோரே' (தொல்-செய்-69) எனவுங் கூறிற்றென்பது. எழுசீர் இறுதி ஆசிரியமெனவே, ஆசிரியவடி பலவும்வந்து எருத்தடி முச்சீராக வருமென்பதுகொள்க. "அரிதாபவறன்" என்னும் (11) கலிப்பாவினுள் "இனைநல முடைய கானஞ் சென்றோர்" என்பது ஈற்றயன் முச்சீரிறுதி ஆசிரியத்தாற் கலிப்பாவாயிற்று.

"மணிநிற மலர்ப்பொய்கை" என்னும் (70) கலிப்பாவினுண்,

* ஈண்டு இருக்கவேண்டிய சூத்திரப்பொருள் முன் அச்சுப் பிரதியிலும் ஏடுகளிலும் காணப்படவில்லை. நச்சினார்க்கினியர் இவ்விரு சூத்திரங்களுக்கும் பொருளுரைக்குமாறு: 'கலிப்பா எழுசீரிறுதியாகி, ஆசிரியத்தாலும் வெண்பாவின் இறுதியாலும் முடியும், என்றவாறு.'

"மெல்விடான் செவிமுதல் மேல்வந்தான் காலைபோ
லெல்லாந் துயிலோ வெடுப்புக வின்பெண்டி
ரில்வி னெழீஇய யாழ்தழீஇக் கல்லாவாய்ப்
பாணன் புகுதராக் கால்"

என வெண்பாவியலினும் டண்புற வந்தவாறு.

பண்புறவென்பது விசேடம்; மிசமுடியு மென்றவாறு. எனவே ஈண்டுச்கூறுத இருசீரடி யாலும் நாற்சீரான் வந்த கலிப்பாவடியாலும் ஐஞ்சீரடியாலும் முடிவன கொச்சகக் கலியுள்; அவை இத்துணை விசேடமிலவென்றவாறு. ஈண்டுவிதந்து ஓதியவெல்லாம் பெரும்பான்மையும் ஒத்தாழிசைக் கலிச்செனவுணர்க. இடலென்றதனாற் கட்டளைவெண்பாவே வரல்வேண்டுவதில்லை எனக்கொள்க. பண்புற என்றதனான் மூன்றடியின் இழியிற் பண்புபட வாரா வெள்ளைச்சுரிதக மெனவுங் கொள்க. (எஎ)

390. எழுத்து முதலா வீண்டிய வடியிற்
குறித்த பொருளை முடிய *நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர்.

இஃது 'யாத்த சீரே யடியாப் பெனுஅ' (தொல்-செய்-1) என விறுத்த முறையானே அடியுணர்த்தி யாப்புணர்த்துகின்றது.

இதன் பொருள் : எழுத்துமுதலா ஈண்டிய அடியிற் குறித்த பொருள்களை முடிய யாத்தல் யாப்பாவதென்று சொல்லுவர் புலவர், என்றவாறு.

அடிக்கண்ணே முடியுமெனவே இருசீரும் முச்சீருங் கிடப்ப முடியநாட்டினும் நாற்சீர்கொண்டு முடியநாட்டினும் அமையுமென்பது. மாத்திரை முதலாக வென்னாது எழுத்தென்ற தென்னையெனின், எழுத்தும் அசையுஞ் சீருங்கொண்டியன்ற ஏரோவடிக்கண்ணே இன்பஞ்செய்யும்; அது பொருட்சாய் இன்றியமையாமையின் எழுத்து

* 'நாட்டில்' என்பதும் பாடம்.

முதலாகவென்று னென்பது. ஈண்டியவடி யென்பது அவை மூன்றும் ஒன்றாகத் தொடர்ந்து ஈண்டிய அடியென்றவாறு. எனவே, இவற் றைப் பொருளன்றி வேறுவேறு செய்யாது, பொருட்டொடர்படச் செய்யவேண்டுமென்பதூஉம் (*கூறி, ஓரடிக்கட் பொருளாற் செய் யாது, ஒழிந்த அடிக்கண் ஒரு சொல்லினைப் பகுத்து வாங்கிக்கொண்டு போய் வைத்தலாமென்பதூஉம்) கூறியவாறாயிற்று. குறித்தபொரு ளென்றது அவ்வடியில் தான் வைக்கக் கருதிய பொருளைப் பிறிதோர் அடியுங்கொண்டுகூட்டாது அமைந்து †மாறச்செய்தல். 'யாப்பறிபுலவர்' என்பது அவ்வாறு செய்தல்வல்ல புலவர் அதுகூறினரென்றவாறு. அது, இதுபோலச் சீரும் பொருண்முடிய நிற்றலின் யாத்தசீரொன்று னென்பது.

"மாயோன் மார்பி லாரம் போல
மணிவரை யிழிதரு மணிகிளர் ருடை
நன்பொன் வரன்று நாட
னன்புபெரி துடைய னின்சொல் லினனே."

என இது குறித்தபொருளை நாற்சீரடிதோறும் முடிய நாட்டின வாறு.

"மண்டில மழுங்க மறுகிறங் கிளர
வண்டின மலர்பரந் தூது மீமிசைக்
கண்டற் கானற் குருகின மொலிப்ப" (அகம்-259.)

என்றவழி, இருசீரானும் முச்சீரானும் நாற்சீரானுங் குறித்த பொருளை முடிய நாட்டினவாறு கண்டுகொள்க.

முச்சீரான் முடியநாட்டுவன ஒருசார் வெண்பாட்டினுட் பயின்று வருமெனவுணர்க.

---

* இருபிறைக்குட்பட்ட இச்சொற்றொடர் ஏட்டுப்பிரதிகளிற் காணப்படவில்லை.

† 'வரச்செய்தல்' என்பதும் பாடம்.

"முயற்கோடு சீவி முதுவிசும்பு போழ்ந்தான்" என்றவழி எழுத்தும் அசையுஞ் சீரும் பொருளிலவாகி வந்தமையின் அஃதமையாது, யாப்பெனப்படாது ; சொல்லிலக்கணத்தாற் சொற்றொறும் பொருளுடையவாயினுமென்பது.

"மணிவெண் ணகைவன முலைமதி முகமலர்
விழியிணைச் செவ்வாய் மென்னடைப் பேதை."

என்றவழியும் முதலடிக்கட் பொருட்டொடர்பினை அறுத்துக் குறைத்துச் செய்ததன்மையின் அதுவும் யாப்பறிபுலவரான் யாப்பெனப்படாதென்றவாறு. (எஅ)

391. பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
யங்கத முதுசொல்லோ டவ்வேழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பி
னற்பெய ரெல்லை யகத்தவர் வழங்கும்
யாப்பின் வழிய தென்மனார் புலவர்.

இச்சூத்திரம் அரிமாநோக்கு, மேற்கூறிய யாப்பிற்கும் வருகின்ற மரபிற்கும் அப்பகுதியுரிமை கூறினமையின்.

இதன் பொருள் : பாட்டும், உரையும், நூலும், வாய்மொழியும், பிசியும், அங்கதமும், முதுசொல்லுமென்று சொல்லப்பட்ட அவ்வேழு நிலத்தும் 'வடவேங்கடந் தென்குமரியாயிடை' (தொல்-பாயிரம்) நாட்டார் நடாத்துகின்ற செய்யுளின் பெயரே தனக்குப் பெயராகவுமுடைத்து மேற்கூறிய யாப்பு, என்றவாறு,

எனவே, மேற்குறித்த பொருளை அடிக்கண் முடிய நாட்டல் யாப்பென்றான், அதுவேயன்றி இப்பகுதிப்படச்செய்தலும் யாப்புறுப்பேயென்றானும். இவ்வேழுவகையானுஞ் செய்தன் மரபென எதிரது நோக்கிற்று. பாட்டு உரை நூல் என்பவற்றிலக்கணம் முன்னர்ச் சொல்லுதும். யாப்பின் வழியதென்பது இவ்வேழு வகைப்பட்ட யாப்பின் பெயரது மரபாகும் யாப்பாகிய உறுப்பென்றவாறு. இதனை

